# ஸ்ரீ ஆதிசங்கரர் வரலாறு

கலியுகம் பிறந்து 2000 ஆண்டுகளுக்குப் பிறகு கேரள மாநிலத்தில் காலடி க்ஷேத்திரத்தில் சிவகுரு, ஆரியம்பா என்ற தம்பதிகளுக்கு, கைலாயத்தில் இருக்கும் ஸ்ரீ பரமேஸ்வரன் குழந்தையாகப் பிறந்தார். அந்த குழந்தைக்குச் சங்கரன் என்று பெயர் சூட்டப்பட்டது ஸ்ரீ சங்கரனுக்கு ஐந்து வயதில் உபநயனம் செய்விக்கப் பட்டது.

ஸ்ரீ சங்கரர் ஒரு நாள் பிக்ஷை எடுப்பதற்காக வெளியே சென்றார். ஒரு வீட்டில் ஓர் ஏழ்மையான பெண்மணியானவள் ஸ்ரீ சங்கரருக்கு பிக்ஷைக்குப் பொருள் கொடுக்க முடியாமல் பக்தியுடனும் லஜ்ஜையுடனும், நெல்லிக்கனியை அளித்தாள். ஸ்ரீ சங்கரரும் அதைப் பெற்றுக் கொண்டு ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் செய்து தங்க நெல்லிக்கனிகளை வரவழைத்துக் கொடுத்தார்.

ஸ்ரீ சங்கரர் எட்டு வயதில் வேதம் சாஸ்திரம் இவைகளைப் பூரணமாக அத்யயனம் செய்து முடித்தார். ஒரு நாள் தன்னுடைய தாயாருடன் நதிக்கு ஸ்நானம் செய்யச் சென்றார். அங்கு ஸ்ரீ சங்கரரின் காலை முதலை பிடித்துக் கொண்டது. அப்பொழுது தாயாரின் அனுமதியுடன் சன்யாஸத்தை மேற்கொண்டார். சன்யாஸத்தின் மூலம் மறு பிறவி அடைந்த ஸ்ரீ சங்கரரின் காலை முதலை விட்டுவிட்டது. பிறகு தாயாரின் அனுமதியுடன் மத்திய பிரதேசத்தில் உள்ள ஓங்காரேஸ்வரர் க்ஷேத்திரத்தில் நர்மதா நதிக்கரையை வந்தடைந்தார். அங்கு கோவிந்த பகவத்பாதரைக் குருவாக ஏற்றுக்கொண்டு முறையாக சன்யாஸி ஆனார். குருவின் அனுமதியுடன் ஸ்ரீ சங்கரர் அன்று முதல் சங்கராச்சாரியார் ஆனார். பிறகு காசி சென்று கங்கா ஸ்நானம் செய்தார். எல்லா பண்டிதர்களிடமும் சாஸ்திரம் விசாரம் செய்தார்.

ஒரு நாள் ஸ்ரீ சங்கராச்சாரியார் கங்கைக் கரைக்கு அக்கரையில் உள்ள தன் சிஷ்யனை இக்கரைக்கு வரும்படி அழைத்தார். சிஷ்யனும் குருவின் மேல் விசுவாசம் வைத்து நீரின் மேல் நடந்து வந்தான். அப்போது அந்த சிஷ்யன் கால் வைக்கும் இடம் எல்லாம் தாமரைப் பூக்கள் தோன்றிப் பாதங்களைத் தாங்கியவாறு குருவிடம் சேர்த்தன, அன்றுமுதல் அந்த சிஷ்யனுக்குப் பத்மபாதர் என்று பெயர் வழங்கலாயிற்று.

ஒரு நாள் விஸ்வேஸ்வரர் ஸ்ரீசங்கரரைப் பரீக்ஷை செய்வதற்காக சண்டாள ரூபத்தில் எதிரில் தோன்றினர். ஸ்ரீ சங்கரர் ஞானத்தால் இதை அறிந்து ஆண்மீக உணர்வு பெற்று இருக்கையில் சண்டாள ரூபத்கில் வந்தவர் விஸ்வேஸ் வரனுகக் காட்சி அளித்தார்.

ஸ்ரீ சங்கரர் காசியிலிருந்து கிளம்பி பத்ரிநத் சென்றார். பத்ரிநத்தில் நாராயண குண்டத்தில் கிடந்த ஸ்ரீ பத்ரி நாரா

யணரைத் தன் யோக சக்தியால் எடுத்துப் பிரதிஷ்டை செய்தார். அங்கு ஸ்ரீ வேத வியாசரைக் கண்டு தத்துவ விசாரம் செய்தார். அப்பொழுது ஸ்ரீ சங்கரருக்கு வயது பதினாறு. ஸ்ரீ வேத வியாஸர் இன்னும் பதினாறு ஆண்டுகள் பூலோகத் தில் இருந்து அத்வைத் தத்துவத்தை விளக்குமாறு ஸ்ரீ சங்கரரை அனுக்ரஹித் தார். பிறகு அங்கிருந்து ஸ்ரீ சங்கரர் கேதார்னாத் சென்றார். கேதாரத்தில் தன்னுடைய பூத உடலை விட்டுவிட்டு யோக சக்தியால் கைலாயம் சென்று ஸ்ரீ பரமேஸ்வரனைத் தரிசித்து அவரிட மிருந்து ஐந்து ஸ்படிக லிங்கங்களையும் பெற்று வந்தார். ஸௌந்தர்யலஹரி என்ற நூலை நந்தி தேவனுக்குப் பாதி கொடுத்துவிட்டு மற்றொரு பாதியை எடுத்து வந்தார். பிறகு கேதாரத்தில் தன்னுடைய நிஜ சரீரத்தை எடுத்துக் கொண்டார். (இதையே சிலர் கேதாரத் தில் சித்தி அடைந்து விட்டதாகத் தவறு தலாக கூறுகிறார்கள்)

பிறகு ஸ்ரீ சங்கரர் பாரத தேசம் முழு வதும் யாத்திரை செய்யத் தொடங்கினர். அலஹாபாத்தில் கர்மமீமாம்சகரான குமரிலபட்டரைக் கண்டார். அவர் கேவல கர்ம மார்க்கத்தை வாதத்தில் ஜெயிக்க ஸ்ரீசங்கரரை மண்டனமிஸ்ரர் இடத்திற்கு அனுப்பினர். ஸ்ரீ சங்கரரும் மண்டன மிஸ்ரரை வாதத்தில் வென்ருர். சரஸ்வதி தேவியின் அவதாரமான, மண்டன மிஸ்ர ரின் மனைவி சரஸவாணி, தன்னையும் வாதத் தில் ஜெயிக்க வேண்டும் என்று தெரிவித் தார். ஸ்ரீ சங்கரர் சரஸவாணியையும் வாதத்தில் ஜெயித்தார். ஸ்ரீ மண்டன மிஸ்ரர் சுரேஸ்வரர் என்ற பெயருடன் ஸ்ரீ சங்கரரின் சிஷ்யரானுர். சரஸவாணியைக் கர்னுடக மாநில துங்கபத்ரா நதிக்கரை யில் சாரதா தேவியாகப் பிரதிஷ்டை செய்தார். அதனைப் பூஜை செய்வதற்கும் ஏற்பாடு செய்தார். கைலாயத்தில் இருந்து கொண்டு வந்த ஐந்து ஒன்ருன போக லிங்கத்தையும் அங்கு வைத்தார். ஒருநாள் மந்த புத்தி புத்தியுள்ள ஒரு சீடனுக்கு

அனுக்ரஹம் செய்து அவரையும் தோட காச்சார்யார் என்ற பெயரில் சிஷ்யராக்கினார். ஒரு நாள் பேசாத மாணவன் ஒருவனைப் பேசவைத்ததோடு பேச்சையே வேதாந்தமாக அமைய அருள் செய்தார். அந்த மாணவனுக்கு ஹஸ்தாமலகர் என்று பெயர் சூட்டி சிஷ்யராக்கினார்.

ஸ்ரீ சங்கரர் எல்லா சிஷ்யர்களுடனும் பாரதம் முழுவதும் பல தடவை யாத்திரை செய்து வேத மதத்திற்கு விரோதமான 72 துர்மதங்களைக் கண்டித்தார் ஸ்ரீ சங்கரரின் சனாதன வைதிக கொள்கையின்படி பரமாத்மா என்றுதான் சத்யம், மற்றவை எல்லாம் அனித்யம், அந்த பரமாத்மாவை அடைவதற்குச் சாதனமாக சகுண, சாகார, விக்ரஹ, அவதார ஸ்வரூபங்களையும் ஏற்றுக் கொண்டு அனேக ஈஸ்வர ஸ்தோத்திரங்களைச் செய்தார். எல்லோரும் புரியும்படியாகத் தன் அனுபவத்தின் மூலம் வேதாந்த நூல்களைத் தானே எழுதினார். ஸ்ரீ வேத வியாசர் அருளிய பிரம்ம சூத்திரம், உபநிஷத்துக்கள் ஸ்ரீ கிருஷ்ணர்

உபதேசித்த பகவத்கீதை என்னும் நூல்களுக்குப் பாஷ்யங்களை இயற்றினார். ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய பல விஷயங்களைத்தொகுத்து 'பஜகோவிந்தம்' போன்ற நூல்களை எழுதினார். பாரத தேசத்தில் துவாரகை, பூரி, பத்ரிநாத் முதலிய இடங்களில் பீடங்களை ஸ்தாபித்தார். கைலாயத்தில் இருந்து கொண்டு வந்த ஐந்து லிங்கங்களில் முக்தி லிங்கத்தைக் கேதாரத்திலும், வரலிங்கத்தைப் பசுபதிநாத்திலும், மோக்ஷ லிங்கத்தைச் சிதம்பரத்திலும். போக லிங்கத்தை ஸ்ரீ சாரதாதேவியைப் பிரதிஷ்டை செய்த இடத்திலும், யோக லிங்கத்தை தன்னுடைய பூஜைக்காகவும் வைத்துக்கொண்டார்.

ஏழு மோக்ஷ புரிகளில் ஒன்றானதும் இதிகாச சரித்திர பிரசித்தி பெற்றதுமான ஸ்ரீ காஞ்சி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ காமாக்ஷீ தேவியை ஆராதனை செய்தார். அப்பொழுது அங்குள்ள வித்வான்களை வாதத்தில் வென்று அம்பாள் சந்நிதியின் முன்பு

சர்வக்ஞ பீடம் ஏறினர். ஸ்ரீ காமாக்ஷி தேவியின் வாச ஸ்நானத்திற்கு காமகோடி பீடம் என்று பெயர். அந்த பீடத்தில் அமர்ந்துகொண்டு ஸ்ரீ காமாக்ஷியையும் ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரரையும் பூஜை செய்து கொண்டு வந்தார். பிறகு காஞ்சி க்ஷேத்திரத்திலேயே சமாதி அடைந்தார். அவருக்கு அடுத்த சிஷ்யர் தாமிரபரணி பிரதேசத்தை சேர்ந்த பிரும்ம தேசம் என்னும் கிராமத்தில் இருந்து வந்த ஒரு வித்யார்த்தி (மாணவன்). அவனை ஸ்ரீ ஆதி சங்கரர் சர்வக்ஞன் என்று அழைத்துத் தான் இருந்துவந்த காமகோடி பீடத்திற்கு முதல் சிஷ்யராக ஆக்கினர். அது முதல் இன்றுவரை 67 ஆச்சார்ய ஸ்வாமிகள் இப்பீடத்தை அலங்கரித்திருக்கிறர்கள். தற்பொழுதுள்ள ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் 68-வது பீடாதிபதி ஆவார்கள். அகில பாரதம் முழுவதும் யாத்திரை செய்துவரும் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 69-வது ஆச்சார்ய சுவாமிகள் ஆவார்கள்.

## ஸ்ரீ ஆதி சங்கரரின் உபதேசங்கள்

1 பகவானை நினை. அவர் ஒருவர்தான் மரணப்பிடியிலிருந்து நீக்குவார்.

2 தாமரை இலையில் உள்ள தண்ணீர் போல யௌவனம், பணம், பதவி, ஆயுள் முதலியவை நிலையற்றவை

3. பணம் இருக்கும்வரைதான் உன்னை உன் சுற்றத்தார்கள் நாடுவார்கள். பணம் இல்லாதபோதோ, அல்லது இறந்துவிட்ட பிறகோ, உன் மனைவி கூட இந்த சரீரத்தைத் தொட விரும்ப மாட்டாள். உன்னிடம் வரவும் விரும்ப மாட்டாள்.

4. தினமும் கொஞ்சமாவது கீதை படி.

5 தினமும் கொஞ்ச நேரமாவது பூஜை செய்.

6. ஏழை எளியோர்களுக்கு உதவி செய்

7. இந்திரியங்களையும், மனதையும் அடக்கிச் சன்மார்க்கத்தில் ஈடுபடு.

8. குருவின் திருவடிகளில் பக்தி செய்து ஜீவன் முக்தி பெற்று ஆன்ம லாபத்தை அடை.

9. காலையில் எழுந்திரு; கடவுளைக் கும்பிடு; கஷ்டங்கள் குறையும்.

10 விபூதி அணிந்துகொள்; வியாதிகள் குறையும்.

11. இந்துமஹா சமுத்திரம் போன்ற இந்து தர்மத்தைக் கடைப்பிடி; இன்பமாக வாழ்வாய்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகம் துயர் தீர்க்கவே

# ஸ்ரீ தோடகாஷ்டகம்

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே
மஹிதோபநிஷத் கதிதார்தநிதே ।
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 1 ॥

கருணாவருணாலய பாலய மாம்
பவஸாகரதுக்க விதூன ஹ்ருதம் ।
ரசயாகிலதர்சன தத்வவிதம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 2 ॥

பவதா ஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோதவிசாரண சாருமதே ।
கலயேச்வர ஜீவ விவேகவிதம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 3 ॥

பவ ஏவ பவாநிதி மே நிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகிதா ।
மம வாரய மோஹமஹாஜலதிம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 4 ॥

ஸுக்ருதே அதிக்ருதே பஹுதா பவத :
பவிதா ஸமதர்சனலாலஸதா ।
அதிதீனமிமம் பரிபாலய மாம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 5 ॥

ஜகதீ மவிதும் கலிதாக்ருதய :
விசரந்தி மஹா மஹஸ : ச்சலத : ।
அஹிமாம்சுரிவாத்ர விபாஸி புர :
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 6 ॥

குருபுங்கவ புங்கவகேதந தே
ஸமதாம் அயதாம் நஹி கோபி
ஸுதீ : ।
சரணாகதவத்ஸல தத்வநிதே
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 7 ॥

விதிதா ந மயா விசதைக கலா
ந ச கிஞ்சன காஞ்சனமஸ்தி குரோ ।
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம்
பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 8 ॥

